ஓதுநெறியொன் றுளதென் னுள்ளமேயோர்தியது
தீதுநெறிசேராச்சிவநெறியிற் - போதுநெறி
யோதம்பிடிக்குமவயலொற்றியப்பனருணடாதிருப்
பாதம்பிடிக்குமபயன (௨௪)

பயனறியாயநெஞ்சேபவஞ்சாதிமாலோ
டயனறியாசசீருடையவமமா - னயனறியா
ருளளததடையானுயரொற்றியூரவனவா
முளளததவளையுறும. (௨௫)

தவராயினுநதேவர்தாமாயினுமற
றெவராயினுநமககிங்கெனனுங் - கவராத
நிநதையகனறிடவெனனெஞசமேயொறறியில்வா
ழெந்தையடிவணஙகாரேல் (௨௬)

ஏலககுழலாரிடைககீழபபடுங்கொடிய
ஞாலககிடஙகரிஙைநம்பாதே - நீல
மணிகண்டாவெனறுவந்துவாழ்ததிநெஞசேநாளும
பணிகண்டாயனனேன்பதம் (௨௭)

பதந்தருவான்செல்வப்பயன்றருவானமனனுஞ
சதந்தருவான்யாவுநதருவா - னிதநதருமென
னெஞ்சமெனகொல்வாடுகின்றாயநின்மலாநினனடியே
தஞ்சமென்றுலொற்றியபபன்றன. (௨௮)

திருச்சிறறம்பலம்

# சி கா ம ணி மா லை.

புள்ளிருககும வேளூா.

க ட் ட ளை க க லி த் து றை.

**திருச்சிற்றம்பலம்.**

வல்விளையேனையிவ்வாழ்க்கைககடனின் றுமவள்ளலுன் ற
னல்விளைவாழ்கைககரையேற்றிமெய்யருணல்குகண்டாய
கொல்விளையானையுரிததோயவயித்தியநாதகுன்றச
செல்விளைமேலவாவாழ்வேயமராசிகாமணியே. (௧)

பொய்யேபுலம்பிப்புழுத்தலைநாயிற்புரந்திலுற்றேன
மெய்யேயுளைககுநின்னன்பர்தஞசார்பைவிரும்புகிலேன்
பையேலரவனையேன்பிழைநோககிப்பராமுகஞ்
செய்யேல்வயித்தியநாதாவமராசிகாமணியே. (௨)

கல்லேன்மனக்கருங்கல்லேன்சிறிதுங்கருததறியாப்
பொல்லேன்பொய்வாஞ்சித்தபுல்லேனிரக்கம்பொறுமைசிறி
தில்லேனெனினுநின்பாலன்றிமற்றையிடத்திற்சற்றுஞ்
செல்லேன்வயித்தியநாதாவமரர்சிகாமணியே. (௩)

ஆப்பார்கடனஞ்சமுதுசெய்தாய்நின்னடிக்கன்பின்றி
யோப்பார்தமக்கும்விருந்தளித்தாயவெள்ளிவெற்பெடுத்த
காப்பாளனுக்குங்கருணைசெய்தாய்கடையேன்றுயருந்
தீர்ப்பாய்வயித்தியநாதாவமராசிகாமணியே. (௪)

நானேநினக்குப்பணிசெயல்வேண்டுநின்னுண்மலர்த்தா
டானேயெனக்குத்துணைசெயல்வேண்டுந்தயாநிதியே
கோனேகரும்பின்சுவையேசெம்பாலொடுகூட்டுநறுந்
தேனேவயித்தியநாதாவமராசிகாமணியே. (௫)

மருவார்குழலியாமையறக்கடல்விழுமவஞ்சநெஞ்சால்
வெருவாவுயங்குமடியேன்பிணியைவிலக்குகண்டா
யுருவாயருவுமொளியுமவெளியுமென்றோதநின்ற
திருவார்வயித்தியநாதாவமராசிகாமணியே. (௬)

தவநேயமாகுநின்றாணேயமின்றித்தடமுலையா
ரவநேயமேற்கொண்டலைகின்றபேதைக்கருள்புரிவாய்
[illegible]நேயமாகிமனவாக்கிறந்தநடுவெளியாஞ்
சிவனேவயித்தியநாதாவமராசிகாமணியே. (௭)

[illegible]வாயரவிற்றுயில்கின்றமாலுமயனுந்தங்கள்
கைவ[illegible] புதைத்துப்பணிகேட்கமேவுமுக்கண்ணரசே
பொய்வாயவிடாவிப்புலையேன்பிழையைப்பொறுத்தருணீ
செய்வாயவயித்தியநாதாவமராசிகாமணியே. (௮)

புலவாயினமுன்னாப்புலிப்போதெனவெனமுன்போந்துநின்ற
கலவாயமனத்தனைக்கண்டஞ்சினேனைக்கடைக்கணிப்பா
யல்வாயமணிமிடற்றாரமுதேயருளானறபெருஞ்
செல்வாவயித்தியநாதாவமரர்சிகாமணியே (௯)

ஆர்த்தார்கடனஞ்சமுதுசெய்தாயென்னையன்பர்கள்பாற்
சேர்த்தாயென்றன்பமனைத்தையுந்தீர்த்துத்திருவருட்கண்
பார்த்தாயபரமகுருவாகியென்னுடபரித்தமர்ந்த
[illegible]தாவயித்தியநாதாவமராசிகாமணியே. (௧௦)

[illegible]றந்தாரையுபோற்புடைசொண்டோர்புடைமண்ணளந்தமுகி
[illegible]றந்தாரையவைத்துலகெல்லாநடத்துந்திருத்தவணடப்
புறந்தாபென்றனபசதொடைத்தாண்டுமெய்யருட்போதந்தந்த
திறத்தாயவயித்தியநாதாவமராசிகாமணியே. (௧௧)

அலையோயாகடலிறவெயோகமேவியவந்தணர்தந்
நிலையோர்சிறிதுமறியேனெனக்குன்னிமலவருண்
மலையோங்குவாழ்க்கையும்வாய்க்குங்கொலோபொன்மலையென்கின்ற
சிலையோய்வயித்தியநாதாவமரர்சிகாமணியே. (௧௨)

ஊணகொண்டதேகததுமுள்ளததுமேவியுறும்பிணியா
ஞானகொண்டதுனபந்தவிர்ப்பாயவயித்தியநாதவென்றே
வான்கொண்டநின்னருட்சீரோதநின்றவகையறியேன்
றேனகொண்டகொன்றைச்சடையாயமரர்சிகாமணியே. (கங)

களிவேதனுமந்தககாலனுமென்னைககருதவொட்டா
வொளிவேதாததிருவுளளஞ்செயவாயனபருள்வமெனனுந
தளிவேதனததுறுநதறபரமேயருட்டண்ணமுதத
தெளிவேவயித்தியநாதாவமராசிகாமணியே (கச)

மாலவிடைமேறகொண்டுவநதெளியேனுடைவல்வினைகரு
மேல்விடையீநதிடவேணடுஙகண்டாயிதுவேசமயம்
நீல்விடமுணடமிடறறுயவயித்தியநாதநிலபாற
சேல்விடுவாடகணணுமையொடுநதேவாசிகாமணியே. (கரு)

திருச்சிற்றமபலம.

# கலிமுறையிடு.

கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

யொய்விடுகின்றிலனென்றெமைபுண்ணியா
கைவிடுகின்றியோகடையனேனறனைப்
பைவிடமுடையவெம்பாம்புமேறறநீ
பெயவிடமனையவென்பிழைபொறுககவே. (க)

பொறுககினுமன்றியென்பொயமைநோககியே
வெறுககினுநினனலால்வேறுகாணகிலேன
மறுககினுந்தொண்டனைவலியவாணடுபின்
சிறுககினும்பெருக்கமேசெயயுஞ்செல்வமே (உ)

செல்லுஞ்சிறுமையுஞ்சினமுமபுல்லனைப
புல்லலுஙகொணடவெனபொய்மைகணடுநீ
கொலலலுநதகுமெனைககொன்றிடாதருண
மல்லலுநதகுஞ்சடாமகுடவள்ளலே. (ங)

வள்ளலேநினனடிமலரைநண்ணிய
வுள்ளலேனபொய்மமையுனனியென்னையாட
கொள்ளலேயின்றெனிறகொடியவென்றனை
யெளளலேயன்றிமறறெனசெயகிறபனே. (ச)

செயயாநனறறிகிலாச்சிறியனேன்றனைப்
பொய்யனெனறெண்ணிப்புறம்பொழிப்பையேல
வையநின்றையவோமயங்கலன்றியா
னுய்யநின்றுணர்குவதொனறுமில்லையே. (ரு)

வேறு

இல்லையென்பதிலாவருள்வெள்ளமே
தில்லைமன்றிற்சிவபரஞ்சோதியே
வல்லையானசெயும்வஞசமெலாமபொறுத
தொலலையின்பமுதவுதலவேண்டுமே (௬)

இல்லையேயெனபதிங்கில்லையென்றரு
ணலலையேநீயருணயநதுநலகின்ற
கலலையேயனையவெனகன்மநெஞசக
மொலலையேவஞசம்விட்டுவககுமுணமையே (௭)

வேறு.

உணமையேயறிகிலாவொதியனேன்படு
மெணமையேகணடுமுள்ளிரககம்வைததிலை
யணமையேயம்பலததாடுமையநீ
வண்மையேயருட்பெருவாரிலலையோ. (௮)

அல்லலங்கடலிடையாழ்நதநாயினேன்
சொலலலங்கடல்விடைததோனறனினனருண்
மலலலங்கடலிடைமகிழநதுழழகின்ற
கல்லலங்கடன்மனங்கனிதல.மெயமையே. (௯)

மெயமையேயறிகிலாவீணனேனிவ
ணுயமையேபெறவுனையுனனியேததிடாக
கைமையேயனையாதங்கடையிறசெல்லவும்
பொயமையேயுளாககவுமபுணாததெனகொலே. (௧௦)

எனனுடைவஞசகவியறகையாவையும
பொனனுடைவிடையினேயபொறுத்துககொணடுநின்
றனனுடையனபாதஞசங்கஞ்சாரநதுநா
னினனுடைப்புகழ்தனைநிகழ்த்தசசெய்கவே (௧௧)

நிகழுநினறிருவருணிலையைககொண்டவா
திகழுநற்றிருசசபையதனுட்சோககமுன
னகழுமாலேனமாயளவுஞ்செமமலாட
புகழுமாறருளுகபொறுககபொயமையே (௧௨)

திருச்சிறறமபலம.

# எதிர்கொட்பத்து.

எண்சீர்க்கழிநெடிலடிச்சந்தவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆனந்தக்கூத்தனையம்பலத்தானையற்புதத்தேனையெம்மாதிபிரானைத்
தேனந்தக்கொன்றையணிசெஞ்சடையானைச்செங்கண்விடையனையெங்கண்மணியை
மோனந்தத்தார்பெறுந்தானந்தத்தானைமுந்தனைமுத்தியின்வித்தனைமுத்தை
யீனந்தக்காத்தெனையேன்றுகொண்டானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௧)

அடுத்தவர்க்கெல்லாமருள்புரிவானையம்பலக்கூத்தனையெம்பெருமானைத்
தடுத்தெனையாண்டுகொண்டன்பளித்தானைச்சங்கரன்றனையென்றந்தையைத்தாயைக்
கடுத்ததும்பும்மணிகண்டத்தினானைக்கண்ணுதலானையெங்கண்ணகலானை
யெடுத்தெனைத்துன்பம்விட்டேறவைத்தானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே

மாலயன்றேடியுங்காணாமலையைவந்தனைசெய்பவர்கண்டமருந்தை
யாலமுதினருந்தல்செய்தானையாதியையாதியோடந்தமிலானைக்
காலனவருந்திவிழவுதைத்தானைக்கருணைக்கடலையென்கண்ணனையானை
யேலமணிகுழலாளிடத்தானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௩)

சுந்தரர்க்காகமுன்றூதுசென்றானைத்தூயனையாவருஞ்சொல்லரியானைப்
பந்தமறுக்கும்பராபரன்றனைப்பத்தருளங்கொள்பரஞ்சுடரானை
மந்தரவெற்பின்மகிழ்ந்தமர்ந்தானைவானவரெல்லாம்வணங்கநின்றானை
யெந்தமையாண்டுநல்லின்பளித்தானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே (௪)

அன்பர்கள்வேண்டுமவையளிப்பானையம்பலத்தேநடமாடுகின்றானை
வன்பர்கணெஞ்சின்மருவலில்லானைவானவர்கோனையெம்வாழ்முதலானைத்
துன்பந்தவிர்த்துச்சுகங்கொடுப்பானைச்சோதியைச்சோதியுட்சோதியைநாளு
மென்பணிகொண்டெனையேன்றுகொண்டானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே

கண்ணுதலானையென்கண்ணமர்ந்தானைக்கருணாநிதியைக்கறைமிடற்றானை
யொண்ணுதலாளுமைவாழிடத்தானையொருவனையொப்பிலாவுத்தமன்றனை
நண்ணுதல்யார்க்குமருமையினானைநாதனையெல்லார்க்குநல்லவன்றனை
யெண்ணுதல்செய்தெனக்கின்பளித்தானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே.

வெள்விடைமேல்வரும்வீறுடையானைவேதமுடியினில்வீற்றிருந்தானைக்
கள்விரையார்மலர்க்கொன்றையினானைக்கற்பகந்தன்னைமுக்கண்கொள்கரும்பை
யுள்விளங்கியென்னுள்ளமர்ந்தானையுலகுடையானையென்னுற்றதுணையை
யெள்வினையானுமிலாதவன்றன்னையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௭)

பெண்ணமர்பாகனைப்பேரருளோனைப்பெரியவர்க்கெல்லாம்பெரியவன்றனைக்
கண்ணமர்நெற்றிக்கடவுட்பிரானைக்கண்ணனையாண்டமுக்கண்ணனையெங்கள்
பண்ணமர்பாடற்பரிசளித்தானைப்பார்முதலண்டம்படைத்தளிப்பானை
யெண்ணமராதவெழிலுடையானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௮)

வளஙகொளுந் திலலைபபொனமனறுடையானைவானவர்சென்னியினமாணிககநதனை
களஙகமிலாதகருததுடையானைககறபனைமுறறுஙகடந்துநின்றானை [னைக
யுளஙகொளுமெனறனுயிாததுணையானையுணமையையெலலாமுடையவனறனனை
யிளமபிறைசூடியசெஞ்சடையானையினறையிரவிலெதிரந்துகொள்வேனே (௯)

குற்றமெலலாஙகுணமாககககொள்வானைககூததுடையானைப்பெணகூறுடையானை
மறறவாயார்ககுமரியவனறனனைவநதிப்பவாககுமிகவெளியானைப
பெறறமதேறுமபெரியபிரானைப்பிறைமுடியோனைப்பெமமானையெமமானை
யெற்றியெனறுனபமெலாமொழிதசானையினறையிரவிலெதிரநதுகொளவேனே (௰)

திருசசிறறமபலம.

# நெஞ்சொடுநேர்தல்

கோயில.

எணசீாக்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

**திருச்சிற்றம்பலம்.**

அணிகொள்கோவணககநதையேநமககிஙகடுததவாடையென்றறிமடநெஞ்சே
கணிகொண்மாமணிககலன்கணஙகடவுட்கண்ணுண்மாமணிககணடிகைகணடாய
பிணிகொள்வனபவநீககுமவெணணீறேபெருமைச்சாநதமாம்பிறஙகொளிமனறிற
றிணிகொள்சங்காசிவசிவவெனறுசெனறுவாழ்ததலேசெய்தொழிலாமே. (௧)

செயதநனறிமேற்றீஙகிழைப்பாரிறறிருப்புமெனறனைததிருபபுகின்றனைநீ
பெயதபாவிளைககமரிடைககவிழ்க்குமபேதையாதலிறபிறழ்நதனையுனைநான
வைதபோதினும்வாழ்தநெனநினைநதுமறுததுநீககியவழிநடககின்றாய
கொயதகோடினைநடடனைவளர்பபாயகொடியநெஞ்சமேமடியகிற்றிலையே. (௨)

இலையெனுததனுவளவுமொனறீயவெண்ணுகினறிலையெனபெறுவாயோ
கொலையிறுநெதனவறிநதிலைநெஞ்சேகொலலுகின்றவககூறறினுஙகொடியாய
தலையினமாலைதாழ்சடையுடைபபெருமான்றணினைந்திலையூணினைநதலகிற
புலையினூர்கள்பாறபோதியோவீணிறபோகபபோகவிபபோககினிலழிநதே (௩)

அழிநதவாழகைகையினவலமிஙகனைததுமையமின்றிநீயறிநதனைநெஞசே
கழிநதவெசசிலைவிழைநதிவோாபோறகலநதுமீட்டுநீகலஙகுகினறனையே
மொழிநதமுனனையோாபெறுஞ்சிவகதிகேமுன்னுறாவகையென்னுறமுன்று
விழிநதநாயினுஙகடையனுயநின்றேனெனசெயவேனுனையேனடுநதேனே (௪)

தேனெய்யாடியசெஞசடைககனியைததேனைமெயயருட்டிருவினையடிய
ரூனைநெககிடவுருககியவொளியையுள்ளததோஙகியவுவப்பினைமூவா
கோனையானநதககொழுங்கடலமுதைககோமளததினைககுன்றவிலலியையெம்
மானையமபலவாணனைநினையாய்வஞ்சநெஞசமேமாயந்திலையினுமே. (௫)

இனனுமெங்ஙனமேகுகின்றனையோவேழைநெஞ்சமேயிங்குமஙகுநதான்
முனனைநாம்பிறநதுழன்றவத்துயரைமுனனிலென்குலைமுறுக்குகின்றனகா
ணென்னைநீயெனககுறுதுணையந்தோவெனசொலேற்றிலையெழில்கொளும்பொதுவில்
மன்னுநம்முடைவள்ளலைநினைததாலமற்றுநாமபிறவாவகைகருமே. (௬)

பிறந்துமுன்னரிவ்வுலகினுமபெண்பிள்ளையாதியபெருந்தொடக்குழந்தே
யிறந்துவீழ்சுதியிடைவிழுந்துழன்றேயிருந்தசேடத்தினித்தனையெல்லா
மறந்துவிட்டனைநெஞ்சமேநீதான்மதியிலாயதுமறந்திலனெளியேன்
றுறந்துநாமபெறுஞ்சுகத்தினையடையச்சொல்லும்வண்ணநீதொடங்கினன்றே. (எ)

நன்றுசெய்வதற்குடன்படுவாயேனல்லநெஞ்சமேவல்லவிவ்வண்ண
மின்றுசெயத்தினாளையென்பாயேலின்றிருந்தவர்நாளைநின்றிலரோ
வொன்றுகேண்மதிசுகர்முதன்முனிவோருக்கவக்கணஞ்சிகைகெனத்துறந்தா
ரன்றுமுன்னரோகடந்தனரறியதற்குமுன்னரோயகன்றனரன்றே. (அ)

அன்றினோர்கிலைநம்முடைப்பெருமானஞ்செழுத்தையுமடிகடிமறந்தா
யொனறிமேற்கதியுறவகையந்தோவுணர்கிலாயவயிற்றுணபொருட்டயலோர்
முன்றிலகாத்தனையவ்வளவேனுமுயன்றுகாதிலைமுனனவன்கோயிற
றுன்றினறநற்றொண்டர்தநதொழும்புதொடங்குவானவாதூயமுனறிலையே. (கூ)

தூயநெஞ்சமேசுகம்பெறவேண்டிற்சொல்லுவாமதுசொல்லளவனறுற்
காயமாயமாங்கான்செறிந்துலவுங்கள்வரைவளைகைவிடுத்ததன்மேற
பாயவாணவப்பகைகெடமுறுக்கிப்பகலிராவிலாப்பாங்கரினினறே
யாயவானந்தக்கூத்துடைப்பரமாகாயசோதிகண்டமருதலன்றியே (க0)

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சறைகூவல்.

## திருவொற்றியூர்.

எணசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கண்கண்மூன்றுடையார்கறைமணிமிடற்றார்கஙகைநாயகாமங்கைபங்குடையா
பணகனிடியபாடலாமனறிறபாதகநீடியபங்கயப்பதத்தா
ரொண்கண்மாதராாநடம்பயிலொற்றியூரமாந்துவாழ்வுற்றவாகக்கோநம்
மண்கொண்மாலைபோமவண்ணநறமிழ்பபூமாலைசூட்டுதும்வருதியெனமனனே (க)

கரியமாலன்றுகரியமாவாகிக்கலங்கநின்றபொற்கழலபுனைபத்தா
பெரியவணடங்கள்யாவையும்படைத்துமபித்தனென்னுமப்பேர்தனையகலா
துரியசீரகொளுமொற்றியூரமர்ந்தாருமபாநாயகாதமப்புயமபுனைய
வரியகன்றுஈனமலாகொடுதெரிந்துமாலைசூட்டுதுமவருதியெனமனனே ( )

திருவினுபகன்கைப்படைபெறவான்றிருக்கண்சாத்தியதிருமலாப்பதத்தா
கருவினின்றவெம்போல்பவாதம்மைக்காத்தளிப்பதேகடனெனக்கொணடா
ருருவினின்றவாருவெனநின்றேரொற்றியூரிடையுற்றனரவர்க்கு
மருவினின்றநன்மணங்கொளுமலர்ப்பூமாலைசூட்டுதுமவருதியென்மனனே (௩)

கருகைப்பாககனைக்கடவுளாஞ்முகன்யான்கடவுளாதியாகலக்கடவிப்பான்
றருக்கைப்பொட்டுயோவிருஞ்சயன்போலத்தோனறின்றவாதுர்சுறுத்திட்டோன
றருமைபம்பூம்பொழிலொற்றியூரிடத்துத்தலங்கொண்டாரவாதமக்குநாமகிழ்ந்து
வருக்கைபெருஞ்சாத்தரிப்பூமாலையோடணிபூமாலைசூட்டுதுமவருதியெனமனனே. (௪)

வதனநானகுடைமலரவன்சிரததைவாங்கியோர்கையிலவைததநம்பெருமா
னிதனெஞ்சகாககருடருஙகருணைநிதியமாகியநின்மலப்பெருமான்
சுதனமங்கையாநடஞசெயுமொறறிததூயனாலவர்துணைததிருததோட்கு
மதனவினறமிழமாலையோடணிபூமாலைசூட்டுதுமவருதியெனமனனே. (௫)

கஞ்சனைஙகொருவிஞ்சனமாகிக்காலிற்போந்துமுன்காணருமுடியா
ரஞசனஙகொளுநெடுங்கணளெங்களம்மைகாணநின்றாடியபததசார்
செஞசொனமாதவர்புகழ்திருவொறறிததேவாகாணவாதிருமுடிககாட்ட
மஞசனஙகொடுவருதுமெனமொழியைமறுதுநீயுடன்வருதியெனமனனே. (௬)

சூழுமாலயனபெண்ணுருவெடுததுததொழும்புசெயததிடததோன்றிநினறவனைப்
போழுமவணணமேவடுகனுக்கருளுமபூதநாதாநற்பூரணனைநதர்
தாழுநதனமையோருயாவுறச்செய்யுநதகையரொற்றியூர்ததலத்தினரவர்தாம
வாழுஙகோயிற்குததிருவலகிடுவோமகிழ்வுகொண்டெனவருதியெனமனனே. (௭)

விதியுமாலுமுனவேறுருவெடுத்துமேலுங்கீழுமாய்விரும்புறநின்றோ
நதியுஙகொனறையுநாகமும்பிறையுநண்ணியோஙகியபுணணியச்சடையா
பதியுநாமஙகளனநதமுறறுடையாாபணைகொளொற்றியூர்ப்பரமாகாணவாதாம்
வதியுஙகோயிறகுததிருவிளககிடுவோம்வாழ்கநீயுடன்வருதியென்மனனே. (௮)

குளஙகொள்கண்ணினார்குறறமேசெயினுஙகுணமென்றேயதைககொண்டருள்புரிவோ
ருளஙகொளனபாதமுள்ளகததிருப்போரொற்றியூரிடமபறறியபுனிதா
களஙகொள்கணடரெணடோளாகங்காளாகலலைவில்லெனக்கண்டவரவாதம்
வளஙகொளகோயிறகுததிருமெழுககிடுவோமவாழ்கநீயுடன்வருதியெனமனனே. (௯)

பணிகொண்மாாபினாபாகனமொழியாள்பாகாகாலனைப்பாற்றியபததரா
திணிகொள்வனமதமலையுரிபோாததோாதேவாநாயகர்திஙகளஞசடையா
ரணிகொளொறறியூரமாந்திடுநதியாகராழகாஙவாமைநதுவீறறிருககு
மணிகொள்கோயிறகுத்திருப்பணிசெயதுமவாழகநீயுடன்வருதியென்மனனே (௧0)

திருசசிற்றமபலம்.

# நெஞ்சைசத்தேற்றல்.

திருவொற்றியூர.

எணசீாக்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

திருச்சிற்றம்பலம்.

சென்றுவஞ்சர்தம்புறஙகடைநினறுதினைககுமென்னுமெனறிறனிலாநெஞ்சே
யொனறுமஞசலையெனனுடன்கூடியொற்றியூர்க்கினறுவருதியேலங்கு
மனறுணமேவியவளளலாமகிழ்நதுவாழ்கினறாரவர்மலரடிவணஙகி
நனறுவேணடியயாவையுமவாங்கிநலகுவேனெனைநம்புதிமிகவே. (௧)

இதுவேண்டியசிறியர்தம்மனையிற்சென்றுநின்றுநீஇளைத்திடனெஞ்சே
யாதுவேணடுதிவருதியென்னுடனேபாணர்மேவியவொற்றியூாகத்து
மாதுவேணடியநடனநாயகனார்வள்ளலாாஙகுவாழ்கின்றார்கண்டா
யீதுவேண்டியதென்றுமுன்னளிப்பாரேற்றுவாங்கிநானீகுவனுனக்கே. (௨)

இரக்கின்றோர்களுக்கில்லையெனா தீரார்பாலிரந்தலீதலாமெனவுணர்ந்திலையோ
கரக்கின்றோர்களைக்கனவினுநினையேலகருதிவந்தவாகடியவனெனினும்
புரக்கின்றோர்மலர்ப்புரிசடையுடையார்பூதநாயகாபொனமலைச்சிலையா
ருரக்குன்றோதிருவொற்றியூரகக்கேகியுன்னியேற்றுதுமுறுதியென்னெஞ்சே. (௫)

கல்லினெஞ்சர்பாற்கலங்கலென்னெஞ்சேகருதிவேண்டியதியாததுகேணீமா
சொல்லின்ஞோங்கியசுந்தரப்பெருமான்சோலைசூழொற்றிதழெதான்னகாப்பெருமா
னலலினோங்கியகண்டதழெதமபெருமானயனுமாலுநின்றறிவரும்பெருமான்
வல்லையீகுவானீகுவதெல்லாம்வாங்கியீகுவேனவருதியெனனுடனே. (௪)

இலவுகாக்கின்றகிள்ளைபோலுழன்றுயென்னைநினமதியேழைநீநெஞ்சே
பலவுவாழைமாககனிகனிந்திழியும்பணைகொளொற்றியூர்க்கென்னுடனவருதி
நிலவுவெணமதிச்சடையுடையழகாநிறையமேனியினிகழ்ந்தநீற்றழகர்
குலவுகின்றனாவேண்டியவெல்லாங்கொடுப்பர்வாஙகினானகொடுப்பனுன றன்ககே.

மன்னுருத்திரர்வாழ்வைவேண்டினையோமாலவன்பெறும்வாழ்வுவேணடினையோ
வன்னவூர்திபோலாகவேணடினையோவமையுமிந்திரனாகவேண்டினையோ
வென்னவேண்டினுநதடையிலைநெஞ்சேயினறுவாஙகினானீகுவனுனககே
வன்னியஞ்சடையெமபிரானுறைறிவளஙகொளொற்றியூரிடைவருதியெனனுடனே. (௬)

மறப்பிலாச்சிவயோகம்வேண்டினுமவழுததருமபெருவாழ்வுவேண்டினு
மிறப்பிலாதினனுமிருககவேண்டினுமயாதுவேணடினுமீகுவனுனககே
பிறப்பிலாவென்ஙகள்பரசிவபெருமானபிததனெனறுநீபெயர்ந்திடனெஞ்சே
வறப்பிலானருட்கடலவனமாந்துவாழுமொற்றியின்வருதியென்னுடனே. (௭)

காலஞ்செல்கின்றதறிந்திலைபோலுஙகாலன்வந்திடிறகாரியமிலைகா
ணீலஞ்செலகின்றமிடற்றினாகரததினிமிர்ந்தவெணணெருப்பேந்தியநிமல
னோலஞ்செல்கின்றகுழலியோர்பாலுடையாரிருககுமொற்றியூர்க்கென்னுடன்வருதி
ஞாலஞ்செல்கின்றதுயர்கெடவரஙகளைநலகுவாரவைநலகுவனுனககே. (௮)

சென்றுநீபுகும்வழியெலாமுன்னைததேடவென்வசமலலவென்னெஞ்சே
யினறுணாக்கணமெங்குநோநதோடாதியலகொளொற்றியூர்க்கென்னுடன்வருதி
யன்றுவானவருயிர்பெறநஞ்சமருந்திநின்றவெமமண்ணலாரிடததே
நின்றுவேண்டியயாவையுமுனககுநிகழவாஙகினானீகுவனன்றே. (௯)

கெடுககுமவண்ணமேபலருனக்குறுதிகிளததுவாரவாகெடுமொழிகேளே
லடுக்குமவண்ணமேசொலகினறேனெனனைநீயிம்மையிம்மையுமகனறிடாமையினுற்
றடுக்கும்வண்ணமேசெய்திடேலொற்றித்தலததினுககின்றெனறனனுடன்வருதி
மடுக்கும்வண்ணமேவேணடியவெலலாமவாஙகியீகுவேன்வாழ்தியென்னெஞ்சே

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சறிவுறூஉ.

திருவொற்றியூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

என்னதன்றுகாண்வாழ்க்கையுட்சார்ந்தவின்பதுன்பங்களிருவினைப்பயனென்
மன்னுமும்மலமடஞ்செறிமனனேவாழ்தியோவிங்குவல்வினைக்கிடமா
யுன்னநல்லமுதாஞ்சிவபெருமானுற்றுவாழ்ந்திடுமொற்றியூர்க்கின்றே
யின்னலற்றிடச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே (௧)

துன்பவாழ்வினைச்சுகமெனமனனேசூழ்ந்துமாயையுளாழ்ந்துநிற்கின்றாய்
வன்பதாகியநீயுமென்னுடனேவருதியோவன்றிநிற்றியோவறியே
னன்பதாகியவுருவுடைப்பெருமானொருவன்வாழ்கின்றவொற்றியூர்க்கின்றே
யின்பவாழ்வுறச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (௨)

ஆட்டுகின்றதற்காகவம்பலத்துளாடுகின்றசேவடிமலர்நினையாய்
வாட்டுகின்றனைவல்வினைமனனேவாழ்ந்துநீசுகமாயிருக்கண்டாய்
கூட்டுகின்றநம்பரசிவனமகிழ்விற்குலவுமொற்றியூர்க்கோயில்சூழ்ந்தின்ப
மீட்டுகின்றதற்கேகின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (௩)

வஞ்சவாழ்க்கையைவிடுத்தனனீயேவாரிக்கொண்டிங்குவாழ்ந்திருமனனே
நஞ்சமாயினுமுண்குவைநீதானுனுமங்கதைநயப்பதுநன்றோ
தஞ்சமென்றவர்க்கருட்டரும்பெருமான்றங்குமொற்றியூர்த்தலத்தினுக்கின்றே
யெஞ்சலின்றிநான்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (௪)

உண்மையோதினுமோர்ந்திலைமனனேயுப்பிலிக்குவந்துண்ணுகின்றவர்போல்
வெண்மைவாழ்க்கையினுகாவினைவிரும்பிவெளுக்கின்றாயுனைவெறுப்பதிலென்னே
தண்மைமேவியசடையுடைப்பெருமான்சார்ந்தவொற்றியந்தலத்தினுக்கின்றே
யெண்மைநீங்கிடச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (௫)

நீடுமைம்பொறிநெறிநடந்துலகநெறியிற்கூடிநீநினைப்பொடுமறப்பு
நாடுமாயையிற்கிடந்துழைக்கின்றாய்நன்றுநின்செயனின்றிடுமனனே
யாடுமம்பலக்கூத்தனெம்பெருமானமர்ந்தவொற்றியூராலயத்தின்றே
யீடுநீங்கிடச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (௬)

கூறுமோகணத்தென்னுறுநினைவுகோடிகோடியாய்க்கொண்டதைமறந்து
மாறுமாயையான்மயங்கியமனனேவருதியன்றெனினிற்றியிவ்வளவி
லாறுமேவியவேணியெம்பெருமானமர்ந்தவொற்றியூராலயமதன்பா
லீறினின்புறச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (௭)

யாதுகண்டனையதனிடத்தெல்லாமணைகின்றாயவமாகநிற்கிந்த
போதுபோக்கினையேயினிமனனேபோதிபோதிநீபோம்வழியெல்லாங்
கோதுநீக்கிநல்லருட்டரும்பெருமான்குலவுமொற்றியூர்க்கோயிலுக்கின்றே
யேதமோடநான்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே (௮)

விசைசைவேண்டினைவினையுடைமனனேமேலைநாட்பட்டவேதனையறியாய
துசைசநீபடுந்துயருனக்கலலாற்சொல்லிறந்தநற்சுகமபலித்திடுமோ
பிசைசையெம்பெருமானெனநினையேறபிறங்குமொறறியம்பெருந்தகையவன்பா
விச்சைகொண்டுநானசெலகினறேனுனுககுமியமபினேனபழியிலலையெனமீதே (௯)

தூககமுற்றிடுஞ்சோம்புடைமனனேசொலவதெனனையோசுகமிதுவெனறே
யாககமுறறுநானவாழநீநரகிலாழநேர்ந்திடுமென்றுகணடறிகா
ணீககமுற்றிடாநின்மலனமர்ந்துநிகழுமொற்றியூர்நியமத்திற்கினறே
யேக்கமறறிடச்செலகின்றேனுனககுமியம்பினேன்பழியில்லையெனமீதே. (௧௦)

திருச்சிறறமபலம்.

---

# நெடுமொழிவஞ்சி.

திருவொற்றியூர்.

எணசீாக்கழிநெடிலடியாசிரியவிருததம.

**திருச்சிற்றம்பலம்.**

வாரகொண்மங்கையர்முலைமலைகசேறறிமறிதருமஙகவாமடுவினிறறளளப
பாரகின்றுயெனைக்கெடுப்பதிலுனககுப்பாவமேயலாற்பலனசிறிதுளதோ
வீாக்கினருய்கடுங்காமமாம்புலையாவினறுசென்றுநானோர்பெறுமொறறி
யூாகுண்மேவியசிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையெனறுணரே. (௧)

கொடியமாதர்களிடையுறுநரககுழியிலென்றனைகொணடுசெனறழுததிக
கடியவஞ்சனையாலெனைககலக்கஙகண்டபாவியேகாமவேடடுவனே
யிடியநெஞ்சகமிடருழந்திருந்தேனின்னுமெனனைநீயேனிழுககினறு
யொடிவிலொறறியூாசசிவனருள்வாளாலுனனைவெட்டுவலுணமையெனறுணரே. (௨)

பேதைமாதாதமமருஙகிடையாழ்ந்தபிலததிலென்றனைப்பிடிததழவீழ்ததி
வாதையுறறிடவைததனையையோமதியில்காமமாம்வஞ்சகமுறியா
வேதநீததருளடியர்தஞ்சாாவாலெழுகினறேனெனையினனுநீயிழுககி
லோதுமொற்றியூாச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரே. (௩)

கோவமென்னுமோாகொலைப்புலைததலைமகதொடியனேயெனைககூடிநீநினற
பாவவனமையாறபகையடுததுயிாமேற்பரிவிலாமலேபயனிழநதனன்காண
சாவநீயிலதேலெனைவிடுகசலஞ்செய்வாயெனிற்சதுர்மறைமுழகக
மோவிலொற்றியூர்சசிவனருள்வாளாலுனனைவெட்டுவலுணமையெனறுணரே. (௪)

சாாந்தலோபமாந்தயையிலியேடாதாழ்ந்திரப்பவாதமககணுவதனு
வீாநதவொன்றினையீயவுமொட்டாயிரககினறோதரினதுகொளற்கிசைவாய
சோாநதிடாதுநான்றுய்ப்பவுஞ்செயயாய்சுகமிலாதநீதூரநிலவினறே
லோர்நதவொற்றியூர்ச்சிவனருள்வாளலுனனைவெட்டுவலுண்மையெனறுணரே. (௫)

மோகமென்னுமோர்மூடரிற்சிறநதோய்முடிவிலாததுயர்மூலவில்லொழுககிற்
போகமெனனுமோரளற்றிடைவிழவும்போறறுமககளபெண்டன்னைதநதையராஞ்
சோகவாரியிலழுந்தவுமியற்றிச்சூழ்கினறுயெனைததொடர்ந்திடேறபொருடரி
லோகையொற்றியூாச்சிவனருளவாளாலுனனைவெட்டுவலுண்மையெனறுணரே. (௬)

மதமெனும்பெருமதத்தனையெனைவருத்தலோ திஞல்வாயினுக்கடங்கா
சிதமெனும்பரன்செயலினை பறியாய்நீங்குசெய்தனாகனமையாருசெய்தோ
மிதமறிந்தனமெமக்கினியொப்பாராயாவரொன்றனையிழிச்சினையடியாக
குதவுமொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவேனுண்மையென்றுணரே (௭)

அமைவறிந்திடாவாணவப்பயலேயகிலகோடியுமாட்டுகின்றவன்கா
ணமைநடத்துவோன் றுணராமலின்றுநாம்பரனிணையடிதொழுதோங்
கமைவினேதநினேமடியருமானேங்கணிகின்றேமெனக்கருதிடயக்கே
லுமையனென்றொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவேனுண்மையென்றுணரே. (௮)

கருமையாமகங்காரமாக்கடாவாகடையனேயுனைக்கலந்ததனாலே
யருமையாகநாம்பாடினேங்கல்வியறவறிந்தனமருளையுமடைந்தோ
மிருமையின்பமும்பெற்றனமென்றேயெனைமதித்துநாணிழிவடைந்தனன்கா
ணொருமையொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவேனுண்மையென்றுணரே. (௯)

வெண்மைசேரகங்காரமாம்வீணவிடுவிடென்றனைவித்தகமுணராய
தண்மையின்றித்தகித்துவெனத்துணிந்தென்றனையுஞ்சாயப்பதுத்தகவெனநினைத்தா
யண்மைநின்றிடேற்சேயமைசென்றழிநீயென்றிநிற்றியேலரிமுதலேத்து
முண்மையொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவேனுண்மையென்றுணரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# பற்றின்றிறம்பகர்தல்.

திருவொற்றியூர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வாணனாவிடையூர்வரத்தனையொற்றிவாணனைமலிகடல்விடமா
மூணனையடியேமுளத்தனையெல்லாமுடையனையுள்கிநின்றேத்தா
வீணரைமடமைவிழலரைமரட்டவேடரைமூடரைநெஞ்சக்
கோணரைமுருட்டுக்குறும்பரைக்கண்டாற்கூசுவகூசுவவிழியே. (௧)

மூவரையளித்தமுதல்வனைமுக்கண்மூர்த்தியைத்தீர்த்தனைப்பெரிய
தேவரைக்காத்தசெல்வனையொற்றித்தியாகனைநினைந்துநின்றேத்தாப்
பாவரைவரையாப்படிற்றரைவாதப்பதடரைச்சிதடரைப்பகைசேர்
கோவரைக்கொடியகுணத்தரைக்கண்டாற்கூசுவகூசுவவிழியே. (௨)

அண்டனையெண்டோளத்தனையொற்றியப்பனையையனையீல
கண்டனையடியர்கருத்தனைப்பூதகணத்தனைக்கருதிநின்றேத்தா
மிண்டரைப்பின்றுவெளிற்றரைவலியவேற்றரைச்சிற்றரைப்பாபக
குண்டரைவஞ்சக்குடியரைக்கண்டாற்கூசுவகூசுவவிழியே (௩)

நாதனைப்பொதுவினடத்தனையெவர்க்குநல்லனைவல்லனைச்சாம
கீதனையொற்றிக்கிறைவனையெங்கள்கேள்வனைக்கிளர்ந்துநின்றேத்தாத்
தீதரைநரகச்செக்கரைவஞ்சத்திருட்டரைமருட்டராத்தொலையாக்
கோதரைக்கொலைசெய்கோட்டரைக்கண்டாற்கூசுவகூசுவவிழியே. (௪)

நம்பனையழியாநலத்தனையெங்களுத்தனைநீத்தனைக்கசிக
கம்பனையொற்றிக்கங்கைவேணியனைக்கருத்தனைக்கருதிநின்றேத்தா
வம்பனையூத்தைவாயனைக்கபடமாயனைப்பேயனையெட்டிக்
கொம்பனைப்பொல்லாக்கோளனைக்கண்டாற்கூசுவகூசுவவிழியே (௫)

சடையனையெவர்க்குந்தலைவனைக்கொன்றைத்தாரனைச்சராசரச்சடத்துள
ளுடையனையொற்றியூரனைமூவருச்சனையுள்கிநின்றேத்தாக்
கடையனைப்பழையகயவனைப்புரட்டுக்கடியனைக்கடியனைக்கலக
நடையனையுலகநசையனைக்கண்டானடுங்குவநடுங்குவமனமே. (௬)

கஞ்சனைச்சிரங்கொய்கரத்தனைமூன்றுகண்ணனைக்கண்ணனைக்காத்த
தஞ்சனையொற்றித்தலத்தனைச்சைவத்தலைவனைத்தாழ்ந்துநின்றேத்தா
வஞ்சனைக்கடையமடையனைக்காமமனத்தனைச்சினத்தனைவலிய
நஞ்சனையிழிந்தநரகனைக்கண்டானடுங்குவநடுங்குவமனமே. (௭)

தாமனைமழுமான்றரித்தசெங்கரனைநந்தையனைச்சங்கரன்றனைச்
சேமனையொற்றித்தியாகனைச்சிவனைத்தேவனைத்தோந்துநின்றேத்தா
வூமனைநீண்டவொதியனைப்புதியவொட்டனைத்துட்டனைப்பகைகொ
ளுமனைநரகநாடனைக்கண்டானடுங்குவநடுங்குவமனமே. (௮)

ஈசனைத்தாயிலினியனையொற்றியின்பனையன்பனையழியாத்
தேசனைத்தலைமைத்தேவனைஞானச்சிறப்பனைச்சேர்ந்துநின்றேத்தா
நீசனைநாணிலெட்டனைநரகநேயனைத்தீயனைத்தரும
நாசனையொழியாநட்டனைக்கண்டானடுங்குவநடுங்குவமனமே (௯)

நித்தனைத்தூயநிமலனைப்புலியூர்நிருத்தனையொருத்தனைவாய்மைச்
சுத்தனையொற்றித்தலம்வளர்ஞானசுகத்தனைச்சூழ்ந்துநின்றேத்தா
மத்தனைச்சமணவாதனைத்தேரவறியனைமுறியனைவைண
நத்தனைச்சுணங்கனாவனைக்கண்டா * னடுங்குவநடுங்குவமனமே (௧0)

திருச்சிற்றம்பலம்

---

* நடுங்குவநடுங்குவமனமே,—எ-து-ஒருமை பன்மை மயக்கம் - உபலக்கணத்தானமைந்ததென்க. இதனைவிரிக்கிற்பெருகும். அறிவொன்றே யாகவுமிடனும் பற்றுக்கோடும்பற்றி, ஆசிரியர்தொல்காப்பியனார்-மரபியலுள் "ஒன்றறிவது" என்னுஞ்சூத்திரந்தொட்டு "நிலையாமே" என்னுஞ்சூத்திரங்காறும் விதந்தமையானுங்காண்க. அல்லதூஉந்தவமியற்றியிற்பன்மையும் பன்மையி னொருமையு மயங்கிவந்ததென்பதூஉ மொற்றியூர்ச்சிவனருளீறுகெட்டு நின்றதெனக்கொள்ளுநர் கொள்க.

# அடிமைத்திறத்தலசல்.

திருவொற்றியூர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தேவரறியார்மாலறியான்றிசைமாமுகத்தோன்றானறியான்
யாவரறிவார்திருவொற்றியப்பாவடியேன்யாதறிவேன்
மூவாதிருப்பாட்டினுக்கிசைந்தேமுதிராதீம்பாலுமுக்கனியுங்
காவலமுதுநறுந்தேனுங்கைப்பவினிக்குநின்புகழே. (க)

புகழேவிரும்பிப்புலனிழந்தேன்போந்துன்பத்தைப்போற்றுகிலே
னிகழேனெனைநானொற்றியப்பாவெனைமதித்தேனிருண்மனத்தேன
றிகழேழுலகிலெனைப்போலோர்சிறியரறியேன்றீவினையை
யகழேனெனினுமெனையாளாத்தகற்றலருளுக்கழகன்றே. (உ)

அன்றுமறியார்மாதவருமயனுமாலுநின்னிலையை
யின்றுமறியாரன்றியவொன்றுமறியாவொன்னிலொரு
நன்றுமறியேனாயடியேனானெப்படிதானறிவேனோ
வொன்றுநெறியேதொற்றியப்பாவொப்பாரில்லாவுத்தமனே. (ங)

ஒப்பாரில்லாவொற்றியப்பாவுனைநான்மறந்தேன்மாதர்கடம்
வெப்பார்குழியிற்கண்மூடிவிழுந்தேனெழுந்துமவிழ்கின்றே
னிப்பாரிடையிற்களித்தவனையீர்த்துக்கொடுபோய்ச்செக்கிலிடு
விப்பானமனென்பதைநானினையாதறிவைவிடுத்தேனே (ச)

விடுத்தேனறவத்தோர்நெறிதன்னைவியந்தேனுலகவெந்நெறியை
மடுத்தேன்றுன்பவாரிதனைவஞ்சமனத்தார்மாட்டுறவை
யடுத்தேனொற்றியப்பாவுன்னடியைநினையேனலமந்தேன
படுத்தேநமன்செக்கிடும்போதுபடிறேனியாதுபடுவேனோ. (ரு)

படுவேனல்லேனமன்றமராற்பரிவேனல்லேன்பரமநினை
விடுவேனல்லேனெனையுநீவிடுவையல்லையினிச்சிறிதுங்
கெடுவேனல்லேன்சிறியார்சொற்கேட்பேனல்லேனருமநெறி
யடுவேனல்லேன்றிருவொற்றியப்பாவுன்றனருளுண்டே (சா)

உண்டோவெனைப்போன்மதியிழந்தோரொற்றியப்பாவுன்னுடைய
திண்டோளிலங்குந்திருநீற்றைக்காணவிரும்பேன்சோர்ந்தேந்தே
னண்டோருடையாயென்றிரங்கேனிறையுந்திரும்பேனிவ்வறிவைக்
கொண்டேயுனைநான்கூடுவனென்குறிப்பேதொன்றுமறியேனே. (எ)

அறியேனுன்றன்புகழ்ப்பெருமையண்ணாவொற்றியப்பாநான்
சிறியேனெனினுநினையன்றித்தெளியேன்மற்றோர்தேவர்தமை
வெறியேன்பிழையைக்குறித்தெனைக்கைவிட்டாலென்செய்வேனடியே
னெறியேதருதனின்கடன்காணினைப்பணிதலென்கடனே. (அ)

கடனேயடியார்தமைக்காத்தலென்றுற்கடையேனடியனன்றோ
வுடனேபிணியுமொழித்திலையென்னுள்ளத்துயருந்தவிர்த்திலையே
விடனேகண்டத்தின்னமுதேவேதமுடியில்விளங்கொளியே
யடனேர்விடையாய் திருவொற்றியப்பாவுனைநானயர்த்திலனே (௯)

இலனேமற்றோர்துணைசிறிதுமெனனேகாமமெனுங்கடலின்
மலனேனவருந்தக்கண்டிருத்தனமணியேயருளினமரபன்றே
யலனேயயலானடியேனுனையாவொற்றியப்பாநின்
னலனோதில்லையம்பலத்தினடிக்கும்பதமேநாடினனே (௧௦)

நாடியலுத்தேனென்னலவோநமபாமன்றன்னருநட
மாடிமகிழுந்திருவொற்றியப்பாவுன்றனருட்புகழைக்
கோடியளவிலொருகூறுங்குணித்தாரின்றியாங்காங்குந்
தேடியளந்துந்தெளிந்திலரோ திருமான்முதலாந்தேவர்களே (௧௧)

திருச்சிற்றம்பலம்

---

# அவத்தொழிற்கலைசல்.

திருவொற்றியூர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

அணங்கனார்களபத்தனமலைக்கிவருமறிவிலேனென்புராத்துயூறுஞ்
சுணங்கனேனெனக்குன்திருவருள்கிடைக்குஞ்சுமுமுண்டுங்கொலோவறியேன்
கணங்கணேர்காட்டிலெரியகந்தாடுங்கடவுளேகடவுளர்க்கிறையே
யுணங்குவெண்டலைத்தார்புனைதிருப்புயனேயொற்றியூருத்தமத்தேவே (௧)

தேவரோயயனேதிருநெடுமாலேசித்தரோமுனிவரோமுதலா
யாவரோவெனினுநின்றனையறிந்திலாயானுனையறிந்
றுவில்வான்சடைக்கணணிலிபறியுந்தன்மையன்றேபெருந்தகைத்தோ
ரோவினமாதவஞ்செய்தோங்குசீரொற்றியூரமர்ந்தருள்செயுமோனே (  )

ஒன்றுநின்றனையறிந்திலமறைகளுளவென்றோதிலோக்கினறத்தினுநின்
நன்றுநின்றனைநானறிந்தேத்தத்தனுமாசாளலபோலன்றே
சென்றுநின்றடியருள்ளகத்தூறுந்தெள்ளியமுத்தின்திரட்டே
மன்றுணினறுமொணிக்கமலையேவளஞ்செய்நல்லொற்றியூர்மணியே (௩)

மணித்தலைநாகமனையவெங்கொடியாரஞ்சகவிழியினுமையங்கிப்
பிணித்தலைக்கொண்டுவருந்தினேனுழலும்பேதையேற்குனதருள்சேரக்
கணித்தலையறியாப்பேரொளிக்குன்றேகண்ணமூன்றுடையபொன்னணணலே
யணித்தலையடியார்க்கருடிருவொற்றியப்பனேசெப்பரும்பொருளே. (௪)

ஒப்பிலாயுனதுதிருவருள்பெறுவானுன்னிநைகின்றனன்மனமோ
வெப்பிலாழ்ந்தெனதுமொழிவழியடையாதேனைக்கிடங்கொண்டுதழலும்
விப்பரிசானவெனசெய்வேனெளியேனெவ்வணநின்னருள்கிடைக்குந்
துப்புறவொழிந்தோருள்ளகத்தோங்குஞ்சோதியேயொற்றியூர்த்துணையே. (௫)

---

* மறைகள் - இளைக்கின்றது - என்பது. மறைகளுமயராகூட்டமு மாட்டா தென்றற்போலும் வசதபன்மையினறுநணமமாடகக

துணையிலேனினதுதிருவடியல்லாற்றுட்டனேனெனினுமென்றனை
யிணையிலாயுனதுதொண்டர்தந்தொண்டனெனச்செயனின்னருளியல்பே
யணையிலாதனபருள்ளகத்தோங்குமானந்தவெள்ளமேயரசே
பணையில்வாளைகள்பாயொற்றியம்பதியிற்பரிந்தமர்ந்தருள்செயும்பரமே. (சு)

பரிந்துநின்றுலகவாழ்க்கையிலுழலும்பரிசொழிந்தெனமலக்கங்கு
விரிந்திடநினதுதிருவருள்புரியாதிருத்தியேலென்செய்வேனெளியே
னெரிந்திடவெயின்மூன்றழற்றியநுதற்கண்ணெந்தையேயெனக்குறுந்துணையே
விரிந்தபூம்பொழில்சூழொற்றியம்பதியின்மேவியவித்தகவாழ்வே (எ)

வாழ்வதுநின்றனடியரோடன்றிமற்றுமோர்வெற்றருள்வாழ்வென்
றூழ்வதுநினதுதாட்கலான்மறைத்தாட்கெலாஞ்சரணெனத்தாழேன்
சூழ்வதுநினதுதிருத்தளியல்லாற்சூழ்கிலேனெருண்டனேன்றனை
யாளவதுகருதினன்றியென்செய்கேனையனேயொற்றியூரரசே (அ)

ஐயனேமாலுமயனுநின்றறியாவப்பனேயொற்றியூரரசே
மெய்யனேநினதுதிருவருள்விழைந்தேனவிழைவினைமுடிப்பையோவன்றிப
பொய்யனேனறன்மைக்கடாததுகருதிப்பொன்னருள்செயாதிருப்பாயோ
கையனேனொன்றுமறிந்திலேனெனைக்காத்தருள்செயவதுன்கடனே. (கூ)

செய்வதுன்கடன்காண்சிவபெருமானேதிருவொற்றியூர்வருந்தேனே
யுய்வதென்கடன்காணன்றியொன்றிலையுலகெலாமுடையநாயகனே
நைவதென்னெஞ்சமென்செய்கேனினதுநல்லருள்பெறுவிடிலென்னை
வைவதுன்னடியரன்றியிவ்வுலகவாழ்க்கையில்வரும்பொலாவணங்கே (க0)

திருச்சிற்றம்பலம்.

## நாளவத்தலைசல்.

திருவொற்றியூர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

இன்றிருந்தவரைநாளையிவ்வுலகிலிருந்திடக்கண்டிலேமாவா
வென்றிருந்தவத்தோரரற்றுகின்றனராலேழையேனுண்டுத்தவமே
சென்றிருந்துறங்கிவிழிப்பதேயல்லாற்செய்வனசெய்கிலேனந்தோ
மன்றிருந்தோங்குமணிச்சுடரொளியேவள்ளலேயொற்றியூர்வாழ்வே (க)

தாவியேயிருமன்றமாவருமன்றுள்சம்புநின்றிருவருளடையாப்
பாவியேன்செய்வதென்னெனெஞ்சம்பதைபதைத்துருகுகின்றனன்காண்
கூவியேயெனக்குன்னருடரினல்லாற்கொடியனேனுய்வகையறியேன்
வாவியேறப்பெறப்பூஞ்சோலைசூழ்ந்தோங்கிவளம்பெறுமொற்றியூர்வாழ்வே. (உ)

நீரின்மேலெழுத்துமெழுத்தினுமவிரைந்துநிலைபடாவுடம்பினையோம்பிப்
பாரின்மேலலையும்பாவியேன்றனக்குப்பரிந்தருள்பாலியாயென்னிற்
காரின்மேல்வரல்போற்கடாமிசைவருமக்காலன்வந்திடிலெதுசெய்வேன்
வாரின்மேல்வளருந்திருமுலைமலையாண்மணாளனேயொற்றியூர்வாழ்வே. (ங)

கருங்கணஞ்சூழக்கசியுமிவ்வுடலங்கருதுமிக்கணமிருந்ததுதான்
வருங்கணமேதாயழியுமோவையோவஞ்சனேனென்செயவல்லேன்
பெருங்கணஞ்சூழவடவனத்தாடும்பித்தனேயுத்தமத்தவத்தோர்
மருங்கணவுறநின்றருள்கரவென்னுஞ்சொல்வானம்புகுமொற்றியூர்வாழ்வே (௪)

கன்னியரளகக்காட்டிடையுழன்றகன்மனக்குரங்கினேன்றனைநீ
யன்னியனென்றேகழித்திடிலுனக்கிங்காரசொலவல்லவரையா
வென்னியலறியேன்மன்றமாவருநாளென்செயவேனென்செய்வேனந்தோ
மன்னியவன்னிமலர்ச்சடைமருந்தேவளங்கொளுமொற்றியூர்வாழ்வே. (௫)

பசிக்குணவுழன்றுன்பாதத்தாமரையைப்பாடுதலொழிந்துநீர்ப்பொறிபோ
னசிக்குமிவ்வுடலைநம்பினேனென்னைநமன்றமாவருத்திலென்செய்கேன்
விசிக்குநல்லரவக்கச்சினோய்நின்றுமெய்யருளல்லதொன்றும்விரும்பேன்
வசிக்குநற்றவத்தோர்க்கருள்செயவோங்கிவளம்பெறுமொற்றியூர்வாழ்வே. (௬)

கான்றசோறருந்துஞ்சுணங்கனிற்பலநாள்கண்டபுன்சுகத்தையேவிரும்பு
நான்றநெஞ்சகனேன்மன்றமாவருநாணுவதன்றியென்செய்கேன்
சான்றவாமதிக்குநின்றிருவருட்டானசாரந்திடற்றருக்குவனையா
மான்றனிக்கரத்தெந்தம்வள்ளலேயெனைவாழ்விக்குமொற்றியூர்வாழ்வே (௭)

மடிக்குறுநீர்மேலெழுத்தினுக்கிடவேமைவடித்தெடுக்குநர்போல
நொடிக்குளேமறையுமுடம்பினைவளர்க்கநொந்தனனொந்ததுமல்லாற
படிக்குளேமனத்தாற்பரிவுறுகின்றேன்பாவியேன்றனக்கருள்புரியாய
வடிக்குறுந்தமிழ்கொண்டன்பருக்கருளும்வள்ளலேயொற்றியூர்வாழ்வே. (௮)

அங்கையிற்புண்போலுலகவாழ்வினைத்துமழிதரக்கண்டுநெஞ்சயர்ந்தே
பங்கமுற்றலைவதன்றிநின்கமலபாதத்தைப்பற்றிலேனந்தோ
விங்கெனைநிகருமேழையாரெனக்குன்னினருளெவ்வணமருள்வாய
மங்கையோர்புடைகொள்வள்ளலேயழியாவளங்கொளுமொற்றியூர்வாழ்வே. (௯)

கணத்தினிலுலகமழிதரக்கண்டுங்கண்ணிலார்போற்கிடந்துழைக்குங்
குணத்தினிற்கொடியேன்றனக்குநின்னருட்டானகூடுவதெவ்வணமறியேன்
பணத்தினிற்பொலியும்பாம்பணையார்த்தபரமனேபிரமனுமாலறியா
வணத்தினின்றமாணிக்கச்சுடரோவள்ளலேயொற்றியூர்வாழ்வே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

# அவலமதிக்கலசல்.

திருவொற்றியூர்

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மண்ணைமனத்துப்பாவியனான்மடவாருள்ளேவதிந்தளிந்த
புண்ணைமதித்துப்புகுகின்றேன்போதமிழந்தேன்புண்ணியனே
யெண்ணவினியநின்புகழையேத்தேனெறிபோலிருக்கின்றேன்
றண்ணலமுதேநீயென்னைநடத்திக்கொள்ளத்தக்கதுவே. (க)

தக்கதறியேன்வெறியேனான்சண்டமடவார்தம்முலைதோய
துக்கமதனைச்சுகமென்றேதுணிந்தேனென்னைத்தொழும்பனெனின்
மிக்கவடியாரென்சொல்லார்விண்ணோர்மண்ணோரென்புகலார்
செக்கர்நிறந்துப்பொன்மேனித்திருநீறொளிர்செங்கரும்பே. (உ)

கரும்பேயொற்றியூரமர்ந்தகனியேயுன்றன்கழலடியை
விரும்பேனடியாரடித்தொண்டினமேவேனபொல்லாவிடமனைய
பெரும்பேய்மாதர்பிணக்குழியிற்பேதைமனம்போந்திடச்சூறைத்
துரும்பேயெனச்சுழல்கின்றேன்றுணையொன்றறியேன்றுனியேனே (ங)

துனியேபிறத்தற்கேதுவெனுந்துட்டமடவாருட்டத்துமயும்
பனியேயமலஞ்சூழ்முடைநாற்றப்பாழுங்குழிக்கேவீழ்ந்திளைத்தே
னினியேதுறுமோவென்செய்கேனெளியேன்றனைநீயேன்றுகொளாய்
கனியேகருணைக்கடலேயென்கண்ணேயொற்றிக்காவலனே. (ச)

வலமேயுடையாரின்கருணைவாய்ந்துவாழ்ந்தாரவஞ்சகனேன்
மலமேயுடையேனாதலினான்மாதரொனும்பேயவர்க்குழுவாச்
சலமேயொழுகுப்பொத்தரிடைச்சாய்ந்துதளர்ந்தேனசாபறியே
னலமேயொற்றிநாடுடையாய்நாயேனுய்யுநாளென்றோ (ரு)

நாளைவருவதறியேனானஞ்சமனையநங்கையர்தம்
மாளையழுந்துநீர்க்குழியிலழுந்தியழுந்தியெழுந்தலைந்தேன்
கோளையகற்றிநினதடிக்கேகூடும்வண்ணங்குறிப்பாயோ
வேளையெரித்தமெய்ஞ்ஞானவிளக்கேமுத்திவித்தகமே. (சு)

முத்திமுதலேமுக்கணுடைமூர்த்திக்கரும்பேநின்பதத்திற்
பத்திமுதலேயில்லாதேன்பரமசுகத்திற்படிவேனோ
வெத்தியழைக்குங்கருங்கண்ணாரிடைக்குட்பிளந்தவெடிப்பதனிற்
றத்திவிழுந்தேனெழுவேனோதள்ளாநின்றதெனமனமே. (எ)

மனமேமுன்னர்வழிகாட்டப்பின்னேசென்றுமங்கையர்தந்
தனமேயென்னுமலையேறிப்பார்த்தேனிருண்டசலதியொன்று
முனமேதோன்றமதிமயங்கிவிழுந்தேனெழவான்முயலுகின்றே
னினமேயென்னைநீயன்றியெடுப்பாரில்லையென்னரசே. (அ)

என்னைக்கொடுத்தேனப்பணியேயகட்கின்பமெனவேயெனக்கவர்நோய்
தன்னைக்கொடுத்தார்நானேதோதளர்ந்துநின்றேனல்லதுசெம்
பொன்னைக்கொடுத்தும்பெறவரியபொருளேயுன்னைப்போற்றுகிலே
னின்னற்கொடுத்தபவமுடையேனெற்றுக்கிவணிற்கின்றேனே (௯)

எற்றுக்கடியர்நின்றதுநின்னிணைத்தாண்மலரையேத்தவன்றே
மற்றிக்கொடியேனஃதின்றிமடவாரிடைவாய்மணிப்பாம்பின்
புற்றுக்குழன்றேனென்னேயென்புந்தியெவர்க்குப்புகல்வேனே
கற்றுத்தெளிந்தோர்புகழொற்றிக்கண்ணுற்றோங்குங்கற்பகமே. (௧௦)

ஓங்கும்பொருளேதிருவொற்றியூர்வாழரசேயுனைத்துதியேன்
றீங்குமபுழுவுஞ்சிலைநீருஞ்சீழும்வழும்புஞ்சோர்ந்தலைக்கத்
தூங்குமடவார்புலைநாற்றத்தூம்பினுழையுஞ்சூதகனேன்
வாங்கும்பவந்தீர்த்தருள்வதுநின்கடன்காணிந்தமண்ணிடத்தே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

# ஆற்றா வாழ்வின் அலசல்.

திருவொற்றியூர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

துள்ளிவாய்மடுக்குங்காளையராட்டத்துடுக்கினையொடுக்குறுங்காமக்
கொள்ளிவாய்ப்பேய்களெனுமடவியர்தங்கூட்டத்துணாட்டம்வைத்துழன்றே
னுள்ளிவாய்மடுத்துள்ளுருகியானந்தவுததிபோற்கண்கணீருகுப்பா
ரள்ளிவாய்மடுக்குமமுதமேயெங்களண்ணலேயொற்றியூரரசே. (௧)

ஒற்றியூர்மருவொளிசெழுமணியேயுனடியுள்கினின்றேத்தேன்
முற்றியூன்மலினக்குழியிருண்மடவார்முலையெனுமலநிறைக்குவையைச்
சுற்றியூர்நாயிற்சுழன்றனன்வறிதேசுகமெனச்சூழ்ந்தழியுடலைப்
பற்றியூர்நகைக்கத்திரிதருகின்றேன்பாவியேனுய்திறமரிதே (௨)

அரியதுநினதுதிருவருளொன்றேயவ்வருளடைதலேயெவைக்கும்
பெரியதோர்பேறென்றுணர்ந்திலேன்முருட்டுப்பேய்களாயிரங்கூட்டிச்
சரியெனச்சொலினும்போதுறாமடமைத்தையலார்மையலிலழுந்திப்
பிரியமுற்றலைந்தேனேழைநானென்றிப்பெருமநின்னருளெனக்குண்டே. (௩)

பெருமநின்னருளேயன்றியிவ்வுலகிற்பேதையர்புழுமலப்பிலமாங்
கருமவாழ்வெனைத்தும்வேண்டிலேன்மற்றைக்கடவுளர்வாழ்வையும்விரும்பேன்
றருமவாரிதியேதடம்பணையொற்றித்தலத்தமர்தனிமுதற்பொருளே
துருமவானமுதேயடியனேன்றன்னைச்சோதியாதருள்வதுன்பரமே (௪)

அருள்வதுன்னியற்கையுலகெலாமறியுமையவோநானதையறிந்து
மருள்வதென்னியற்கையென்செயவேனிதனைமனங்கொளாதருளருளாயேற்
றெருள்வதொன்றின்றிமங்கையர்கொங்கைத்திடர்மலைச்சிகரத்திலேறி
யுருள்வதுமல்குற்படுகுழிவிழுந்தங்குலைவதுமன்றியொன்றுண்டோ. (௫)

உண்டெஞ்சமரருயிர்பெறக்காத்தவொற்றியூரண்ணலேநின்னைக்
கண்டுநெஞ்சுருகிக்கண்கணீர்சோரக்கைகுவித்திணையடியிறைஞ்சேன்
வண்டுநின்றலைக்குங்குழற்பிறைநுதலாரவஞ்சகவிழியினான்மயங்கிக்
குண்டுநீர்ஞாலத்திடையலைகின்றேன்கொடியனேனடியனேனன்றே (௬)

அன்றுநீயடிமைச்சாதனங்காட்டியாண்டவாரூரன்றனைச்
சென்றுனூதருளென்றிரங்குதனோக்கிச்சென்றநின்கருணையைக்கருதி
யொன்றுதோறுள்ளமுருகுகின்றனன்காணொற்றியூரண்ணலேயுலகத்
தென்றுமாலுழந்தேனெனினுநின்னடியேனென்றனைக்கைவிடேலினியே. (௭)

இனியநின்றிருத்தாளிணைமலரேத்தேனிளமுலைமங்கையர்க்குளங்
கனியவக்கொடியாக்கேவல்செய்துழன்றேன்கடையனேன்விடையவாழ்வுடையேன்
றுனியவிவ்வுடற்கணுயிர்ப்பிரிந்திடுங்காற்றுணைநினையன்றியொன்றறியேன்
றனியமெய்ப்போதவேதநாயகனேதடம்பொழிலொற்றியூரிறையே (௮)

இறையநின்றிருத்தாட்கமலங்களேத்தேனெழில்பெறவுடம்பினையோம்பிக்
குறையுவெண்மதிபோற்காலங்களொழித்துக்கோதையார்குறுங்குழியளற்றிற்
பொறையுநன்னிறையுநீத்துழன்றலைந்தேன்பொய்யனேன்றனக்குவெண்சோதி
நிறையும்வெண்ணீற்றுக்கோலனேயொற்றிநிமலனேயருளுதன்னெறியே. (௯)

நெறியிலேன்கொடியமங்கையார்மையனெறியிலேநின்றனனெனினும்
பொறியிலேன்பிழையைப்பொறுப்பதுன்கடனேபொறுப்பதுமன்றியிவ்வுலக
வெறியிலேயின்னுமயங்கிடாதுன்றன்விரைமலரடித்துணையேத்து
மறிவுளேயருள்வாயொற்றியூரரசேயன்றிருநாதுள்ளுறுத்தவனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# அருட்டிறத்தலசல்.

திருவொற்றியூர்.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

நறைமணக்குங்கொன்றைநதிச்சடிலநாயகனே
கறைமணக்குந்திருநீலகண்டப்பெருமானே
யுறைமணக்கும்பூம்பொழில்சூழொற்றியப்பாவுன்னுடைய
மறைமணக்குந்திருவடியைவாய்நிரம்பவாழ்த்தேனே (௧)

அலைவளைக்கும்பாற்கடலானம்புயத்தான்வாழ்த்திநிற்கந்
தலைவளைக்குஞ்செங்கமலத்தாளுடையாயாளுடையா
யுலைவளைக்காழுத்தலைவேலொற்றியப்பாவுன்னுடைய
மலைவளைக்குங்கைம்மலரின்வண்மைதனைவாழ்த்தேனே. (௨)

ஆறடுத்துச்சென்றவெங்களப்பருக்காவணங்காட்டிச்
சோறெடுத்துச்சென்றதுணையேசுயஞ்சுடரோ
யூறெடுத்தோர்காணரியவொற்றியப்பாவுன்னுடைய
நீறெடுத்தவெண்டோணிலைமைதனைப்பாரேனே. (௩)

சைவததலைவர்தவத்தோர்கடம்பெருமான்
மெய்வைததவுள்ளமவிரவிநின்றவித்தகனே
யுயவைததவுத்தமனேயொற்றியப்பாவுன்றுடைய
தெய்வப்புகழென்செவிநிறையககேளேனே (௪)

பாடுகின்றோர்பாடப்பரிசளிக்கும்புண்ணியனே
தேடுகின்றோர்தேடநிற்குந்தியாகபபெருமானே
யூடுகின்றோரில்லாதவொற்றியப்பாவமபலத்து
ளாடுகின்றசேவடிகண்டல்லலெல்லாந்தீரேனே (௫)

பூணுகமாடப்பொதுநடிககும்புண்ணியனே
சேணுகம்வாழகுஞ்சிவனேகடலவிடததை
யூணுகவுள்ளுவந்தவொற்றியபபாமாலயனுங
காணுதநின்னுருவைககணடுகளியேனே. (௬)

கொள்ளுவாரகொள்ளுங்குலமணியேமாலயனுந்
துள்ளுவார்துள்ளடக்குந்தோன்றலேசூழ்நதுநித
முள்ளுவாருள்ளுறையுமொற்றியப்பாவுன்னுடைய
தெள்ளுவாரபூஙகழற்கென்சிநதைவைததுநிலலேனே. (௭)

செவ்வண்ணமேனித்திருநீற்றுப்பேரழகா
வெவ்வண்ணநினவண்ணமெனறறிதற்கொண்ணுதா
யுவ்வண்ணனேததுகின்றவொற்றியப்பாவுனவடிவ
மிவவண்ணமென்றென்னிதயததெழுதேனே (௮)

மன்றுடையாய்மாலயனுமற்றுமுளவானவருங
குன்றுடையாயென்னககுறைதவிர்ததகோமானே
யொனறுடையாயூர்விடையாயொற்றியப்பாவெனனுடைய
வன்றுடையாயென்றுன்மலரடியைப்போற்றேனே (௯)

குற்றஞ்செயினுங்குணமாககொணடருளு
நற்றவாதமுள்ளநடுநினறநம்பரனே
யுற்றவாதநற்றுணைவாவொற்றியப்பாவென்கருதது
முற்றிடநினசந்நிதியினமுனனின்றுவாழ்ததேனே. (௧0)

வஞ்சமடவார்மயககுமயககொழிய
நஞ்சமணிகண்டததநாதனேயெனறென்று
வுஞ்சயாகள்வாழ்த்துகின்றவொற்றியபபாவுன்னுடைய
கஞ்சமலரடிக்கேகாதலுற்றுப்போற்றேனே (௧௧)

இன்னலுலகவிருணடையினுடோறந
துன்னவருநெஞ்சநதுடுககழியநல்லோாக
ளுன்னலுறுநதெள்ளமுதேயொற்றியபபாவெனையாயுர
றனனடைவேபாடிததழும்பேறக்கணேனே. (௧௨)

பெண்மணியேயென்றுலகிற்பேதையரைப்பேசாதென
கண்மணியேகற்பகமேகண்ணுதலிற்கொள்கரும்பே
யொண்மணியேதேனேயென்றொற்றியப்பாவுன்றனைநான்
பண்மணஞ்செய்பாட்டிற்பரவித்துதியேனே. (கங)

மானமிலாநின்றுள்வழுத்தாதவன்மனத்தா
ரீனரவர்பாற்போயிளைத்தேனிளைப்பாற
வூனமிலார்போற்றுகின்றவொற்றியப்பாவுன்னுடைய
ஞானவடியினிழனண்ணிமகிழேனே. (கச)

கல்லாக்கிதங்கூறிக்கற்பழிந்துநில்லாம
லெல்லார்க்குநல்லவனேயென்னரசேநற்றரும
மொல்லாபுரமெரித்தவொற்றியப்பாவுன்னடிக்கே
சொல்லான்மலர்தொடுத்துச்சூழ்ந்தணிந்துவாழேனே. (கரு)

கற்பவற்றைக்கல்லாக்கடையரிடஞ்சென்றவர்மு
னற்பவற்றைக்கூலிக்கலையுமலைப்பொழிய
வுற்பவத்தைநீக்குகின்றவொற்றியப்பாவுன்னுடைய
நற்பதத்தையேத்தியருணன்னலந்தானண்ணேனே. (கசு)

தந்தைதாய்மக்கண்மனைதாரமெனுஞ்சங்கடத்திற்
சிந்தைதான்சென்றுதியங்கிமயங்காமே
யுந்தையென்போரில்லாதவொற்றியப்பாவுன்னடிக்கீழ்
முந்தையோர்போன்றுமுயங்கிமகிழேனே. (கஎ)

பொய்யொன்றேயன்றிப்புறம்பொன்றும்பேசாத
வைவொன்றுநீநாற்றவாயார்க்குமேலானே
னுய்யவென்றருளீயுமொற்றியப்பாவுன்னுடைய
மெய்யொன்றுநீற்றின்விளக்கமதுபாரேனே. (கஅ)

தூக்கமுமுன்றூங்கியபின்சோறிலையேயென்னுமந்த
வேக்கமுமேயன்றிமற்றோரேக்கமிலாவேழையனே
னூக்கமுளோர்போற்றுகின்றவொற்றியப்பாநின்னடிக்கீழ்
நீக்கமிலாவானந்தநித்திரைதான்கொள்ளேனே. (க௯)

வாதுபுரிந்தீனமடவார்மதித்திடுவோன்
போதுநிதம்போக்கிப்புலம்புமலைநாயே
னோதுமறையோர்குலவுமொற்றியப்பாவூரனுக்காத்
தூதுசென்றநின்றாட்டுணைப்புகழைப்பாடேனே. (௨0)

பொன்னாசையோடும்புலைச்சியர்தம்பேராசை
மன்னாசைமன்னுகின்றமண்ணாசைப்பற்றறுத்தே
யுன்னாசைகொண்டேயென்றொற்றியப்பாநான்மகிழ்ந்துன்
மின்னாரும்பொன்மேனிவெண்ணீற்றைப்பாரேனே. (௨க)

கள்ளுண்டநாயபோற்கடுங்காமவெள்ளமுண்டு
துள்ளுண்டநெஞ்சத்துக்கடக்கியனபாகட
முள்ளுண்டதெள்ளமுதேயொறறியபபாவுனறனைநான்
வெள்ளுண்டநந்திவிடைமீதிறகாணேனே (௧௨)

போராதகாமப்பிணிகொண்டநெஞ்சகனேன
வாராதவானநதவாழ்வுவநதுவாழநதிடவே
யோராதார்க்கெட்டாதவொறறியபபாவுனனுடைய
நீராசடைமேனிலவொளியைககாணேனே (௧௩)

வன்னெஞசப்பேதைமடவாரககழிநதலையுங
கன்னெஞ்சப்பாவியனயான்காதலித்துநெககுருகி
யுன்னெஞசததுள்ளுறையுமொறறியப்பாவுனனுடைய
வெந்நஞசணிமிடறறைமிககுவநதுவாழததேனே. (௧௪)

புண்ணியமோர்போதும்புரிநதறியாப்பொயயவனே
னெண்ணியதோவொணணமிடரினறிமுறறியிட
வுண்ணிலவுநல்லொளியேயொறறியப்பாவுனனுடைய
தண்ணிலவுதாமரைபபொற்றுணமுடியிற்கொள்ளேனே (௧௫)

நனறிதுவென்றோர்நதுமதைநாடாதுநனெறியைக
கொனறிதுநனறெனனக்குறிககுங்கொடியவனயா
னெனறுமனததுளளொளியேயொறறியபபாவுனனுடைய
வெனறிமழுபபடையினமேன்மைதனைபபாடேனே (௧௬)

மண்கிடநதவாழவினமதிமயககுமஙகையரா ற
புணகிடநதநெஞ்சப்புலையேனபுழுககமற
வொண்கிடநதமுததலைவேலொறறியபபாநாரணனறன
கண்கிடநதசேவடியினகாட்சிதனைககாணேனே (௧௭)

கூட்டுவிக்குன்மேலெழவேகூறறுவனவநதாவிதனை
வாட்டுவிக்குங்காலமவருமுன்னேயெவவுயிர்ககு
மூட்டுவிக்குந்தாயாகுமொறறியபபாநீயுலகை
யாட்டுவிக்குமமபலததனறனடமதைப்பாரேனே (௧௮)

மினனெனுப்பாம்வாழ்வைவியநதிடருள்வீழ்நதலைந்தேன
பொனனெனுப்பாயதெயவமணபபூவொப்பாவெனினுமே
புனனெனுப்பாரிலலாதவொறறியப்பாவுனனுடைய
தனனெனுப்பாம்வேணியினமேறசாபிறைகைப்பாரேனே (௧௯)

சிலமறநிற்குஞ்சிறியாருறவிடைநம்
காலமறப்பேசிக்கழிக்கினறேனவானவாந
யோலமறநஞசருநதுமொறறியப்பாவுனனுடைய
நீலமணிமிடற்றின்னேர்மைதனைப்பாரேனே (௨௰)

சீர்புகழுமாலபுகழுநதேவரயன றனபுகழும்
யாாபுகழுமவேணடேனடியேனடிநாயே
னூாபுகழுநல்வளஙகொளொறறியப்பாவுன்னிதழித
தாாபுகழுநற்றெருழுமபுசாாநதுனபானணணேனே. (௩௧)

ஆதவன றனபல்லிறுத தவையற்கருளபுரிநத
நாதவரனேயெனறுநாததழுமபுகொணடேததி
யோதவளமிககவெழிலொறறியப்பாமணணிடநது
மாதவனமுனகாணுமலரடிககண்வைகேனே. (௩௨)

கலலைப்புறங்கணடகாய்மனததுககைதவனேன்
றொலலைப்பழவினையினரேயவகன்றுவாழ்நதிடவே
யொலலைததிருவருள்கொண்டொற்றியப்பாவுனனுடைய
தில்லைப்பொதுவிறறிருநடனஙகாணேனே. (௩௩)

சடையவனேன்கனமனததேன் கைதவனேன்வஞ்ச
நடையவனேனுணிலியேனுயகினையேனறுனபொழிய
வுடையவனேயுலகேததுமொறறியபபாநினபாலவந
தடையநினறுமெயகுளிாநதேயானநதஙகூடேனே. (௩௪)

வாதைமயறகாட்டுமடவாாமலககுழியிற
பேதையெனவீழநதேபிணியுழநதபேயடியே
னேதைகடறகரைவாயொறறியபபாவாழததுகினறோர்
தீதையகறறுமுனறனசீரருளைசசேரேனே (௩௫)

பொயயறகுதவுகின்றபுன்மையினேனவனமைசெயும்
வெயயறகிரிமியெனமெயசோாநதினைததலைநதே
னுயயறகருளசெயயுமொறறியபபாவுனனடிசோ
மெயயாககடிமைசெயதுனமென்மலாததாணணேனே. (௩௬)

திருச்சிற்றமபலம்.

# திருவிண்ணப்பம்.

திருவொற்றியூா.

எழுசீாககழிநெடிலடியாசிரியவிருததம.

திருச்சிற்றம்பலம்.

சழகரிருககுநதெனனிடததிலாயினுநீாதந்தையாதலிறசாாநதகன்னெறியிற
பழககிவைப்பதுதேவரீாககுரியபண்பன்றேயெனைப்பரிநதிலீாஞல்
வழககிருப்பதிறகுமகுமானறனக்கும்வகுத்துக்கூறுதனமாபுமற்றன்றாற்
புழைகைமாவுரியீாறொற்றியுடையீாபொய்யனெனனினில்யானபோமவழியெதுவோ

அழுதுநெருசயர்க்குமையிவினைககின்றேனையநீறறியாததுமன்றே
சுழுவுநுனறியகாட்டகத்தாடுங்கதியிலனெனக்கழறினனல்லாற்
பழுதுபேசினதொன்றிலையொற்றிப்பதியில்வாழ்படம்பககநாயகரே
பொழுதுபோகின்றதென்செய்கேனெனைநீாபொய்யனென்னில்யானபோம்வழியெதுவோ

முன்னைமாதவமுபற்சியொனறிலலாமூடனேன்றனைமுன்வரவழைததுப
பின்னையொனறும்வாயபபேச்சிலீராஞற்பிததவொனறுமைப்பேசிடலாமே
யென்னைநான்பழிததிடுகின்றதலலாலிகழ்கிலேனுமையெழிலொற்றியுடையீர
புன்னையஞ்சடையீரெனையுடையீரபொய்யனெனனிலயானபோமவழியெதுவோ

வன்மைபேசியவன்றொண்டர்பொருட்டாய்வழக்குப்பேசியவள்ளனீரன்றே
யின்மையாளர்போல்வலியவந்திடினுமேழையாமிவனென்றொழிததிட்டாற
றன்மையன்றதுதருமமுமன்றாற்றமியனேனினனுஞ்சாற்றுவதெனனே
பொன்மையஞ்சடையீரொற்றியுடையீரபொய்யனெனனில்யான்போம்வழியெதுவோ

உறஙகுகின்றதும்விழிப்பதுமகிழ்வாயுண்ணுகினறதுமுடுப்பதுமயககு
ளிறஙகுகின்றதுமேறுகின்றதுமாயெய்ககின்றேன்மனமென்னினுமடியே
னறங்கொளும்மடியரணைவடைநதேனயர்வுதீரதெனையாட்கொளநினையீர்
புறங்கொளகாட்டகததீரொற்றியுடையீரபொய்யனெனனில்யானபோமவழியெதுவோ.

கரும்பின்கட்டியுஙகனியையுஙகொடுததாறகயவராயினுக்கசககுமெனறுனையா
ரருமபினகட்டிளமுலையுமைமகிழுமையநீருமதருளெனககளிகக
விரும்பினகட்டிநோநெஞ்சினேனெனினுமேறறுவாஙகிடாதிருநததுண்டேயோ
பொரும்பினகட்டுரியீரொற்றியுடையீரபொய்யனெனனிலயானபோமவழியெதுவோ.

விருப்புநின்றதும்பதமலர்மிசையவவிருப்பைமாற்றுதல்விரகுமற்றன்றாற
கருப்புநேரினுமவளளியோர்கொடுகெகுஙகடமைநீங்குறுருடைமையினறேனு
நெருபபுநமமுருவாயினுமருகினிற்கவஞ்சுறேனீலனுமனறாற
பொருப்புவில்லுடையீரொற்றியுடையீர்பொயயனென்னிலயான்போமவழியெதுவோ

கொடியநஞ்சமுதாககியவுமககிகொடியனேனையாட்கொளுதலரிதோ
வடியாதமபொருட்டடிபடுவீரொமமையநும்மடிககாட்படவிரைநதே
னெடியமாலபனகாணகிலோனுநின்றுகாணகுவலெனறுளநதுணிநதேன
பொடியநீரணிவீரொற்றியுடையீரபொய்யனெனனில்யானபோமவழியெதுயோ. (அ)

வினையினுலுடலெடுததனனேனுமேலைநாளுமைவிருமபியவடியே
னெனையினனுனெனவறிநதிலிரோநீரொழுமைசசெயகையுமிறவெறனவறிவீர
மனையினலவருந்துயர்கெடவுமதுமரபுவேணடியேவநதுநிற்கினறேன
புலையினலமாநதீரொற்றியுடையீரபொயயுனெனனில்யானபோமவழியெதுவோ.

பிழைபுரிநதனனாகிலுமமதுபெருமைநோககிலப்பிழைசிறிதனறே
மழைபுரிநதிடுமவண்கையைமாற்றமதிககின்றேவொவாமறறிலையதுபோ
லுழைபுரிநதருளவீரொனிற்றடுப்பாரும்பரிம்பரிலொருவருமிலைகாண
புழைபுரிநதகையுலவொற்றியுடையீர்பொயயனெனனிலயானபோம்வழியெதுவோ.

திருச்சிற்றம்பலம்.

# பிரசாதவிண்ணப்பம்.

திருவொற்றியூர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பசையிலாக்கருங்கற்பாறைநேர்மனத்துப்பதகனேன்படிற்றுருவகனேன்
வசையிலார்க்கருளுமாணிக்கமணியேவள்ளலேநினைத்தொழன்மறந்து
நசையிலாமலமுண்டோடுறுங்கொடியநாயெனவுணவுகொண்டுற்றேன்
றசையெலாந்துங்கவொற்றியிலுன்னாற்றண்டிக்கப்பட்டனனன்றே. (௧)

அன்னைபோனடியர்க்கருத்தியினருத்துமப்பநின்னடியிணைகாணு
தென்னையோமலமுண்டுழன்றிடும்பன்றியென்னவுண்டுற்றனனாற
புன்னையஞ்சடையெம்புண்ணியவொளியேபூதநாயகவென்றனுடலந்
தன்னைநீயமர்ந்தவொற்றியிலுன்னாற்றண்டிக்கப்பட்டனனன்றே (௨)

கண்ணினாலுனதுகழற்பதங்காணுங்கருத்தினைமறந்துபாழ்வயிற்றை
மண்ணினானிறைத்தலெனவுணவருந்திமலம்பெறவந்தனனதனா
லெண்ணினாலடங்காவெண்குணக்குன்றேயிறைவனேநீயமர்ந்தருளுந்
தண்ணினாலோங்குமொற்றியிலுன்னாற்றண்டிக்கப்பட்டனனன்றே (௩)

நின்முனீலகண்டமென்றோதுநெறிமறந்துணவுகொண்டந்தோ
பொன்முனநின்றவிரும்பெனநின்றேன்புலையனேனாதலாலின்று
மின்முனமிலங்குமவேணியங்கனியேவிரிகடற்றிரைசூழுலகந்
தன்முனமிலங்குமொற்றியிலுன்னாற்றண்டிக்கப்பட்டனனன்றே (௪)

குழிக்குமண்ணடைக்குங்கொள்கைபோற்பாழுங்கும்பியையோம்பினனல்லாற்
செழிக்குமுன்றிருமுன்னீலகண்டந்தான்செப்புதன்மறந்தனனதனால்
விழிக்குணின்றிலங்குமிளங்கொளிமணியேமென்கரும்பீன்றவெண்முத்தந்
தழிக்கொளும்வயல்சூழொற்றியிலுன்னாற்றண்டிக்கப்பட்டனனன்றே. (௫)

கமரிடைமலநீர்கவிழ்த்தல்போல்வயிற்றுக்கடன்கழித்திட்டனனல்லா
லமரிடைப்புரமூன்றெரித்தருள்புரிந்தவையனேநினைத்தொழன்மறந்தேன்
சமரிடைமனத்தேனாதலான்முனிவாசங்கரசிவசிவவென்றே
தமரிடையோங்குமொற்றியிலுன்னாற்றண்டிக்கப்பட்டனனன்றே (௬)

அருமருந்தனையாய்நின்றிருமுன்போயரகரவென்றுதொழன்மறந்தே
யிருளுறுமனத்தேன்மலத்தினுமிழிந்தவியல்புறவுண்டனனதனாற்
கருமருந்தனையவஞ்செழுத்தோதுங்கருத்தாபோற்றிருத்தமதாகத்
தருமநின்றோங்குமொற்றியிலுன்னாற்றண்டிக்கப்பட்டனனன்றே. (௭)

கண்ணுதற்கரும்பேநின்முனீலகண்டமென்றோதுதன்மறந்தே
யுண்ணுதற்கிசைந்தேயுண்டபின்னானெறிபோலுன்முனின்றனனதனா
னண்ணுதற்பொருட்டோர்நான்முகன்மாயோனாடிடவடியார்தமுள்ளத்
தண்ணுதற்கலந்தவொற்றியிலுன்னாற்றண்டிக்கப்பட்டனனன்றே. (௮)

கற்றவாக்கினிதாங்கதியருணீலகண்டவென்றன்றிருமுன்னா
சொற்றிடன்மறந்தேனசோற்றினையூத்தைததருததியிலடைததனனதன்ற
செற்றமறறுயர்ந்தோசிவசிவசிவமாதேவவோமரகரவெனுஞ்சொற்
சற்றும்விட்டகலாவொற்றியிலுன்றேற்றண்டிக்கப்பட்டனனன்றே (௯)

முறைபபடிநினதுமுன்புநின்றேததிமுன்னியபினனருணுமற்
சிறைப்படிவயிற்றிற்பொறைப்படவொதிபோற்சென்றுநினமுனனருறறதன்ற
கறைப்படவோங்குங்கண்டனேயெவாககுங்கருத்தனேயொருத்தனேமிகுசீர்
தறைபபடாநதோஙகுமொற்றியிலுனறேறறணடிககப்பட்டனனன்றே. (௰)

திருச்சிற்றமபலம.

## வழிமொழிவிண்ணப்பம்.

திருவொற்றியூரும்—திருத்தில்லையும.

எண்சீரககழிநெடிலடியாசிரியவிருததம.

**திருச்சிற்றம்பலம்.**

நீலனேன்கொடும்பொய்யலதுரையாநீசனெனபனெஞ்சறிந்ததுகாண்
சாலவாயினுநின்கழலடிக்கேசரண்புகுந்திடிற்றன்றுதல்வழக்கோ
வாலமுண்டநின்றன்மைமாறுவதேலகிலகோடியுமழிந்திடுமன்றே
சீலமேவியவொற்றியம்பரனேதில்லையம்பலந்திகழொளிவிளக்கே (௧)

கண்ணுண்மாமணியேயருட்கருமபேகறறநெஞ்சகஙகனிந்திடுஙகனியே
யெண்ணுளுட்படாவினபமேயென்றெனறெந்தைநின்றனைமேததிலனேனினு
மண்ணுணமற்றியானவழிவழியடியேன்மாயமன்றிதுனமனமறிநததவே
திண்ணமீநதருளொற்றியூரரசேதில்லையம்பலந்திகழொளிவிளக்கே (௨)

நல்லனல்லனுயினுஞ்சிறியேனுனறிநததோநாடறிந்ததுகாண்
சொலலவாயிலையாயினுமெனைநீதொழும்புகொணடிடிறறுயயனுமாயேன
வல்லவுன்கருத்தறிந்திலேனமனமோமயஙகுகினறதியானவாடுகினறனன்காண
செல்வனீககியவொற்றியூரரசேதில்லையம்பலந்திகழொளிவிளக்கே (௩)

இரககமெனபதெனனிடத்திலையெனநீயிகழ்தியேலஃதியல்புமற்றடியேன
பரககநினனருட்கிரககமேயடைந்தேன்பார்த்திலாய்கொலோபாரததனையெனினீ
கரப்பதென்றனககழகன்றுகண்டாயகாளகண்டனேகங்கைநாயகனே
திரககணைநறியாயொற்றியாய்தில்லைததிருச்சிறறமபலந்திகழொளிவிளக்கே (௪)

யாதுநான்பிழைசெயினும்பொறுப்பானெனறதையெம்மிறையென்றுவந்தடைந்தேன
நீதுநோககிநீசெயாததிடிலடியேன்செயவதென்னைநின்சித்தமிஙகறியேன
போதுபோகின்றதனறியென்மாயப்புணர்ச்சியாதொனறும்போகினறதிலைகாண
சீதவார்பொழிலொற்றியமபரனேதிருச்சிற்றம்பலந்திகழொளிவிளக்கே. (௫)

தாய்க்குநதந்தைக்குநிகருநின்னிருதாட்சார்ந்தமேலவாதமைத்தொழுதேத்தா
நாயககுநாயெனும்பாவியேன்பிழையைநாடிநல்லருணல்கிடாதிருந்தா
லேய்க்குமானிறககாலன்வநதிடுமபோதென்கொலாமிந்தவெண்ணமென்மனத்தைத்
தீயகுதென்செய்வேனொற்றியெஞ்சியனேதில்லையம்பலந்திகழொளிவிளக்கே. (௬)

